| (பதம்.) | (பொருள்.) |
| --- | --- |
| ஜீவன்றன் | ஜீவனானவன் தன்னுடை |
| தூலசரீர | சாக்கிராவத்தையிற்றூலசரீரத்தைப் பொருந்தி |
| விவகாரத்திற் | விவகரிக்கும் விவகாரத்தில |
| கூடுந்தத்துவங்கள் | துணையாகச் சேருந்தத்துவங்கள். |

| (பதம்.) | (பொருள். |
| --- | --- |
| தூலசரீரதத்துவம்(சா)சூட்சுமசரீரதத்துவம் (உய) சீவன்ஈசுரன் அவித்தை வித்தை பிரஹ்மம(ரு) ஆக தத்துவங்கள் (நகக) | வெளி. |

வினா:—சீவனுடைய தூலசரீர விவகாரங்களெவை அவைகளில் (நகக) தத்துவங்களுஞ் சேர்ந்துள்ளனவே வெனின். (93

விடை:-சாக்கிராவத்தையிற் கன்மேந்திரியங்கள் தொழிற்படும் விவகாரங்கள் தூலசரீர விவகாரங்களாகும். சிதாபசன் சாக்கிராவத்தையில் வசன தான கமன விசர்க்க ஆனந்த ஸ்நான பான போஜன ஆலிங்கன வாணிப யுத்தமுதலிய விவகாரங்களைச்செய்தற்குக் கன்மேந்திரியங்கள்(ரு).கன்மேந்திரியங்கட்குச் சாதகமாக ஞானேந்திரியங்கள்(ரு). இத்தசேந்திரியங்களுமிருத்தற்குத்தானமாகத்தூலசரீரதத்துவங்கள்(